[திரு. எம். சுப்பையா செட்டியார்] [10th August 1965

கட்சி தான் என்று சொல்ல விரும்புகிறேன். (குறுக்கீடு) விஷத்திற்குக் கூட விஷம் தான் மருந்து. இதை கனம் முதல் மந்திரி அனுபவத்தில் உணர்வார். நேற்று சுதந்திரா கட்சியைப் பற்றி அவர் பேசியபோது அவர் எவ்வளவு ஆத்திரப்பட்டார் என்பதை நாங்கள் கவனித்தோம். நேற்று ஒரு காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் பேச எழுந்தபோது காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் பட்ட பாடு காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியும். இந்த நிலையில் உள்ள கட்சி கட்டுப்பாடு தேவை என்று சொல்வதில் ஆச்சரியம் இல்லை. மனிதனுக்கு சுதந்திரம் தேவை என்பதை இவர்கள் உணர்வார்கள். என் தீர்மானத்தை வற்புறுத்துகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் தலைவர் அவர்களே, கிராமங்களிலுள்ள 'மார்க்கெட்டில் ஸர்ப்லஸ்' அரிசி பூராவையும் அரசாங்கம் கொள்முதல் செய்துவிட்டால், அங்கு அரிசித் தட்டுப்பாடு வரும் பட்சத்தில் அப்போது கிராம மக்கள் என்ன செய்வார்கள் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ. சுப்பையா செட்டியார் கேட்டார். கிராம மக்கள் அரிசித் தட்டுப்பாட்டினால் கஷ்டப்படாமல் இருக்கும் பொருட்டு, கிராமங்களில் அரிசி கிடைக்கச் செய்வதில் அரசாங்கம் கவனம் செலுத்தும். அந்த அடிப்படையில் தான் பெரிய மாவட்டங்களான திருநெல்வேலி, ராமநாதபுரம், கோவை ஆகிய மாவட்டங்களில் '**informal rationing**' கொண்டு வருவதாக இருக்கிறோம்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ சுப்பையா செட்டியார் சில மேற்கோள்கள் காட்டினார்; அவை ஸ்வராஜ்யா பத்திரிகையில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைபற்றி எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை. காந்தியடிகள் வெளியிட்ட கருத்தை அவர் மேற்கோளாகக் காட்டினார். காந்தியடிகள் கண்ட்ரோல் பற்றி பொதுப்படையாகக் கருத்துத் தெரிவித்தார். அந்தப் பொதுப் படையான கருத்தை நானும் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் காந்திஜீ நமக்கு நிலைமைக்குத் தக்கவாறு யோசனைகளை கூறத் தயங்கியதில்லை. காந்திஜீ அங்கீகாரம் இருந்ததால்தான் காஷ்மீருக்குப் படைகள் அனுப்பப்பட்டன. அந்த அந்த சமயத்தில் சந்தர்ப்பத்தில் காந்திஜீ வெளியிட்ட கருத்துக்களை எப்போதும் பின்பற்ற வேண்டும் என்று ஒருவர் கூறுவாரானால், அவர் காந்திஜீயை சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று சொல்லலாம்.

MR. CHAIRMAN : Is the hon. Member withdrawing his resolution?

5-50 p.m. SRI M. SUBBIAH CHETTIAR : I am pressing my resolution, Sir.

MR. CHAIRMAN : The question is—

'This House recommends to the Government to take steps to assure regular supply of rice, wheat and other foodgrains to authorised dealers for distribution to family card holders in mofussil cities, and for the supply of adequate foodgrains to establishments like hotels, factory, canteens, etc.'.

The resolution was put and lost.

(2) *Admissions in schools and colleges.*

* **திரு. க. அன்பழகன் :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, நான் தந்திருக்கின்ற இந்த மிக முக்கியமான தீர்மானத்தை இப்போது முன் மொழிகிறேன்.

" தகுதியுள்ள மாணவர்களுக்கும் மேற்கொண்டும் படிக்க வேறு வழியில்லாமல் உள்ளவர்களுக்கும் இம்மாநிலத்தில் உள்ள பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தொழில் நுட்ப கல்வி நிலையங்களி லும் இடம் கிடைப்பதில்லை என்னும் காரணத்தால் எழுகிற நிலை யைச் சரிப்படுத்த வழிவகைகளை ஆராய்வதற்கென நிபுணர்கள் குழு ஒன்றை நியமிக்கலாம் என்று இம்மன்றம் அரசாங்கத்துக்கு பரிந்துரைக்கின்றது."

**திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி :** தலைவர் அவர்களே, இந்தத் தீர் மானத்தை நான் வழிமொழிகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைப் பிரேரேபித்த உறுப்பினர் அவர்கள் ஒப்புக் கொள்வார்களானால் ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். இப்போது நமக்கு இன்னும் பத்து நிமிஷங்கள் தான் இருக்கின்றன. நீண்ட வாதத்திற்கு அவகாசம் இருக்காது என்று நினைக்கிறேன். அக்டோபர் கூட்டத்தில் இது வரவேண்டியிருக்கும். ஆகையால் முதலில் இதனுடைய நிலைமையை சுருக்கமாக விளக்க விரும்பு கிறேன். அதற்கு மேல் அங்கத்தினர் அவர்கள் பேச வேண்டு மென்றால் பேசலாம்.

**மிஸ்டர் சேர்மன் :** அதுவும் ஆறு மணிவரையில் தான் பேசலாம். (சிரிப்பு.)

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஏனென்றால், இந்தத் தீர்மானம் முடிவு பெறாமல் பத்திரிகையில் வந்தால் ஏதோ ஒரு பயங்கரமான நிலைமை மாணவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது என்ற தவறான கருத்து ஏற்படலாம் என்பதற்காக நான் விளக்க விரும்புகிறேன்.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை யொட்டி என்னுடைய கருத்துக்கள் எல்லாவற்றையும் பேச வாய்ப்பான நேரமாக இல்லாவிட்டாலும் தீர்மானத்தின் கருத்து என்னவென்று சொன்னால் தான் தீர்மானத்தினைப்பற்றி அமைச்சர் விளக்கம் தருவதற்கு வாய்ப்பாக இருக்குமென்று நினைக்கிறேன்.

**மிஸ்டர் சேர்மன் :** தீர்மானத்தில்தான் அது இருக்கிறதே?

**திரு. க. அன்பழகன் :** இத்தீர்மானம் ஒரு அவசர தீர்மானத்தை ஒத்தது. கொள்கை அடிப்படையில் அமைந்ததல்ல. நிலைமை அடிப்படையில் அமைந்தது. உணவுப் பிரச்னை நம்முடைய நேரத்தை மிகுதியாக எடுத்துக்கொண்டது. இந்தக் கல்விப் பிரச்னைக்கு நேரம் இல்லாது போய்விடுமானால் முதலமைச்சர் அவர்களுக்கும் அப்படிப்பட்ட நேர நெருக்கடி இருக்கும். கல்வித் துறையில் இட நெருக்கடி ஏற்பட்டதால் மாணவர்கள் பல்வேறு கட்டங்களில் பாதிக்கப்படுகிறார்கள். அதற்கு முன் இதுபற்றி

[திரு. க. அன்பழகன்] [10th August 1965

முதல் அமைச்சர் விளக்கம் தருவதாகச் சொல்வதால் அது பயன் படுமென்று கருதி நான் அதை வரவேற்கிறேன்.

*** கனம் திரு. எம். பக்தவத்சலம் :** ஆரம்பக் கல்வியைப் பொறுத்த வரையில் 300 மக்கள் தொகை கொண்ட ஒவ்வொரு ஊருக்கும் ஆரம்பப் பள்ளிகள் இருக்கின்றன. அந்தப் பள்ளிகளில் எவ்வளவு மாணவர்கள் சேர்க்கக்கூடுமென்ற நிலையை வைத்துக் கொண்டு இன்றைக்கு எத்தனை மாணவர்கள் வருகிறார்கள் என்று பார்த்தால் நூற்றுக்கு நூறு மாணவ மாணவிகள் வந்தாலும் இன்றைக்கே சேர்த்துக்கொள்ளத் தயாராக இருக்கிறோம். 100-க்கு 92 விதம் ஆண்கள் பெண்கள் சேர்த்து ஆறு முதல் பதினோரு வயது மாணவ மாணவிகள் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறார்கள். தட்டுப்பாடு வருகிறதென்றால் என்ன அர்த்தம்? குறிப்பிட்ட பள்ளிக்கூடங்களுக்குப் போக வேண்டுமென்று விரும்பலாம். அதில் இடமில்லாமல் இருக்கலாம். அது தவிர ஆரம்பப் பள்ளியில் இடமில்லை என்று சொல்வதற்கில்லை. உயர்நிலைப் பள்ளிகள் ஆண்டுதோறும் அதிகமாகி வருகின்றன. 10 ஆயிரம் ரூபாய் டெபாசிட் என்று முதலில் ஐயாயிரம் ரூபாய் கட்டிவிட்டு பின்னால் பாக்கியை கட்டுவது என்றால் உயர்நிலைப் பள்ளி பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்கிறோம் என்கிறார்கள். அவ்வாறு பல உயர்நிலைப் பள்ளிகள் ஏற்பட்டிருக் கின்றன. 500 உயர்நிலைப் பள்ளிகள் ஆரம்பிக்கப்பட்ட பிறகு இந்த ஆண்டு தேவையிருக்காது என்று நினைத்தேன். 150-க்கு மேல் புதிதாக ஏற்பட்டிருக்கின்றன. கல்வி நிபுணர்கள் தரம் குறைந்து விடுமே என்று கவலைப்படுகிறார்கள். தரம் குறையக் கூடாது என்ற கவலை அரசாங்கத்திற்கும் உண்டு. வசதிகளைப் பெருக்குவதிலும், அதற்குத் தகுந்த விஞ்ஞான அறிவு பெற்ற ஆசிரியர்களைப் பெறுவதிலும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. பிள்ளைகளுக்கும் பெற்றோர்களுக்கும் உயர்நிலைக் கல்வி குறைந்த பட்ச படிப்பு என்ற உணர்வு ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட பள்ளியில் சேர்க்க வேண்டுமென்ற நோக்கத்தில் அதிகமாகப்போனால் அங்கே ஒரு நெருக்கடி ஏற்படுகிற மாதிரி தோன்றும். ஆனால் இன்றைக்குச் சொல்வேன். ஆண்டுதோறும் இது நாம் அனுபவிக்கிற ஒரு அனுபவம், நாம் காண்கின்ற காட்சி, கேட்கிற ஒரு குறைபாடு. மாணவர்களுக்கு இடமில்லை என்று பத்திரிகைகள் எழுதும்; போட்டோக்கள் போடுவார்கள். ஏதோ இந்த முறை பத்திரிகை கள் போடவில்லை. அது ஒரு பழக்கமாக--பேஷனாகப் போய் விட்டது. யாராவது மாணவர்கள் உயர்நிலைப் பள்ளியில் இடம் கிடைக்காமல் நிறுத்தப்பட்டார்கள் என்று கனம் அங்கத்தினர் ஏதாவது இருந்து சொன்னால் அதில் மேற்கொண்டு கவனம் செலுத் தலாம். ஆரம்பப் பள்ளியில் இடமில்லாமல் வீட்டில் இருப்பதாக யாரும் சொல்லவில்லை. உயர்நிலைப் படிப்பை எடுத்துக்கொண்டா லும் குறைந்த பட்ச படிப்பு என்ற வகையில் கல்லூரி படிப்பில் எல்லோருக்கும் ஆர்வம் இருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். கடந்த இரண்டு ஆண்டுகளாக கல்லூரி வைக்கிறவர்கள்

10th August 1965] [திரு. எம். பக்தவத்சலம்]

வைக்கட்டும் என்றும் அதற்கு ஆதரவு கொடுக்கிறேம் என்றும் சொல்கிறேம். மற்றவைகள் பல்கலைக்கழகம் கவனித்துக் கொள்ளும். அப்படியும் அரசாங்கம் ஒன்றிரண்டு கல்லூரிகளை ஆரம்பித்திருக்கிறது. மேலும் கல்லூரி அமைக்க வேண்டிய பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொன்னால் செய்கிறேம். கோவையிலிருந்து வந்தவர்கள் என்னிடம் சொன்னார்கள். நாங்களே அமைக்கவேண்டுமென்றால் அவ்வளவு அதிகமான பொருள் திரட்ட முடியாது; அரசாங்கம் அமைக்க முன்வரவேண்டுமென்றார்கள். கோவையிலிருந்து வந்தவர்கள் அப்படிச் சொன்னார்கள். ஆகையால் இதிலும் கஷ்டமிருக்கிறது. ஐந்து லட்சம் நன்கொடையாக வசூலித்துக் கொடுங்கள், மற்ற பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும் என்று சொன்னேம். பெண்களுக்கும் பொதுவாகவும் கல்லூரிகள் அமைக்கப்படுகின்றன. ஆண்டுதோறும் கல்லூரிகள்—இந்த ஆண்டிலும் புதிதாகக் கல்லூரிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நெருக்கடிக்குக் காரணம், குறிப்பிட்ட ஒரு கல்லூரிக்கு மனுப்போடுகிறார்கள். சிலர் நான்கைந்து கல்லூரிக்குப் போடுகிறார்கள். முதலில் வருவதை ஏற்றுக்கொள்கிறார்கள். சரியோ, உண்மையோ என்னவென்று தெரியாது. திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரிக்கு 4,000 மனுக்கள் வந்தன என்று சொல்கிறார்கள். கல்லூரியினுடைய பாராட்டுதலாக இருக்கிறதே தவிர உண்மையில் நெருக்கடி என்று எடுத்துக் கொள்ள முடியாது. செயிண்ட் ஜோசப் கல்லூரிக்கு வந்தால் நல்லது என்று நினைக்கிறார்கள். அதில் கிடைக்கவில்லை என்றால் வேறு ஒன்றுக்கு போகிறார்கள். என்னிடம் சிலர் சிபாரிசுக்கு வருகிறார்கள். நான் யார் சிபாரிசு செய்வதற்கு?

மற்றொன்று, ஸ்கூல் பைனல் பரிட்சை முடிவுகள் தாமதமாக தெரிவிக்கப்பட்டதால் கல்லூரிகளுக்கு அப்ளிகேஷன் போட முடியவில்லை என்றார்கள். வைஸ்-சான்சலருக்கு அதைத் தெரிவித்து மேலும் காலம் வேண்டுமென்று கேட்டோம். ஒப்புக் கொண்டார்கள். அப்ளிகேஷன் ஆகஸ்டு 21-ந் தேதி வரையில் போட காலம் நீடிக்கப்பட்டிருக்கிறது. கல்லூரிகளில் ஸ்தானங்களை அதிகப்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டது. சென்ற ஆண்டும் அப்படித்தான் செய்யப்பட்டது. சென்ற ஆண்டு மாணவ மாணவிகள் வராமல் போகவில்லை. புதிதாக அமைக்கப்பட்ட கல்லூரிகளில் மனுக்கள் சரியாக வரவில்லை. கல்லூரி மேல் படிப்புக்கு அமெரிக்கா, ஜெர்மனி என்று சிலர் போகிறார்கள். அங்கேயே தங்குகிறார்கள். தங்கள் ஊரில் இடம் வேண்டுமென்று எதிர்பார்ப்பதில்லை சிலர். உள்ளூரில் உள்ளவர்களுக்கும் இடம் கொடுங்கள் என்று பல்கலைக் கழகத்துக்கு தெரிவிக்கப்பட்டது. கல்லூரி ஸ்தானங்களை அதிகப்படுத்த வேண்டுமென்று அரசாங்கம் தெரிவித்தது. பல்கலைக் கழகமும் அனுமதி தரவேண்டும். அவர்களும் ஓரளவு கொடுக்கிறார்கள். விஞ்ஞான பாடங்கள் அதிகப்படுத்த போதிய வசதியில்லை. கொடுக்க முடியவில்லை என்று தெரிவித்ததாகத் தெரிகிறது. வைஸ்-சான்சலருக்கு எழுதியிருக்கிறது. இதுவரையில் இல்லாத வகையில் மாணவர்கள் கல்லூரிகளில் சேர விரும்புகிறார்கள். எப்படியாவது இடம் கொடுக்க வேண்டுமென்று

அரசாங்கம் கருதுகிறது. விஞ்ஞானப் படிப்புக்கு இடம் கொடுப்பது கஷ்டம் என்று பல்கலைக் கழகம் தெரிவித்தது. ஹியூமானிட்டிஸ் (Humanities)-க்கு இன்னொரு செக்ஷன் வைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லப்பட்டது. இரண்டு நாட்களுக்கு முன்பு கடலூருக்கு சென்றிருந்தேன். விஞ்ஞானத்திற்கு ஒரு செக்ஷன் கொடுக்கவேண்டுமென்றார்கள். பல்கலைக் கழகத்திற்குத் தெரிவித்தோம். அனுமதி கொடுத்தார்கள். கல்லூரி பிரின்சுபாலுக்கு தெரிவித்தோம். விஞ்ஞானத்திற்கும் இடம் கொடுக்க கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. கோவையில் ஹியூமானிட்டீஸ்க்கு புது செக்ஷன் வேண்டுமென்று கேட்டார்கள். இப்படி நெருக்கடி வருவது கூட நல்லது என்று சொல்லவேண்டும். அதனால் ஹியூமானிட்டீஸ் (Humanities) -க்கும் மாணவர்கள் அக்கறை எடுத்துக்கொள்கிறார்கள். அரசாங்கத்தின் கவனத்திற்கு வரும் போதெல்லாம் அதிக அக்கறையுடன் பிரச்னைகள் கவனிக்கப்படுகின்றன. கல்லூரிகளிலே சேரமுடியாமல் போகும் நிலை ஏற்படாது. இந்த ஆண்டிலேயும் அதிகமாகக் கல்லூரிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதற்கென்று ஒரு குழு போட்டு அவர்கள் என்ன செய்யமுடியும்? இருக்கிற நிலைமை இதுதான். ஆகையால் இந்தக் குழுவிற்கு அவசியமில்லை என்று கூறி இந்தத் தீர்மானத்தை கனம் அங்கத்தினர் வற்புறுத்தவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. க. அன்பழகன் :** On a point of information, Sir. சென்னை நகரத்திலே மட்டும் பி.யு.சி. வகுப்பிலே சேர விரும்புகிற மாணவர்களிலே 100-க்கு 25-க்கு மேலே சென்னை நகர மாணவர்களுக்கு இடம் கிடைக்காத சூழ்நிலை சென்னையிலே இருக்கிறது. இது மிகப் பெரிய நகரமாக இருந்து மக்கள் தொகை அதிகமாக இருக்கிற காரணத்தால் மற்ற நகரங்களிலே இல்லாத அளவு நெருக்கடி இருக்கக்கூடும். ஏறத்தாழ எந்த அளவு மாணவர்கள் சேர்க்கப்பட இடம் இருக்கிறதோ அதை அதிகப்படுத்தி P. U. C வகுப்பில் விஞ்ஞானப் பகுதியிலே சென்னையிலே, மேலும் 500 மாணவர்களையாவது பல்வேறு கல்லூரிகளிலே சேர்க்க அமைச்சர் அவர்கள் பல்கலைக் கழகத்தின் மூலம் வழி செய்ய வேண்டும். குறிப்பாக விஞ்ஞானப் பயிற்சிக்கு (லெபாரடரி) பயிற்சிக்கூடங்கள் போதுமான அளவு இல்லை என்று சொல்கிற காரணத்தால் விஞ்ஞான மாணவர்கள் வெவ்வேறு நேரத்திலே யாவது காலை 8 மணிக்கோ, மாலை 5½ மணி வரை இருந்தோ பயிற்சி பெறத்தக்க வகையிலே 500 மாணவர்களுக்குப் புதிதாக இடம் கிடைக்க வழி செய்து இந்த நெருக்கடியைத் தவிர்க்க அமைச்சர் அவர்கள் ஏதாவது செய்ய முடியுமா என்று அறிய விரும்புகிறேன்?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** சென்னை நகரிலே 100-க்கு 25 பேருக்கு இடம் கிடைக்கவில்லை என்றால் 75 பேருக்கு இடம் கிடைக்கக்கூடும். எல்லோருக்கும் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பதற்கு இல்லை. இப்பொழுது பாலிடெக்னிக் பற்றி தீர்மானத்திலே இருக்கிறது. இன்ஜினீயரிங் இன்ஸ்டிட்யூஷன் இருக்கிறது.

**10th August 1965]** *[திரு. எம். பக்தவத்சலம்]*

எல்லாவற்றுக்கும்தான் போகவேண்டும். எந்த நாட்டிலேயும் மெட்ரிகுலேஷன் பாஸ் பண்ணுகின்றவர்களுக்கெல்லாம் கல்லூரியிலே இடம் கொடுக்க ஏற்பாடு செய்வதில்லை. இருந்தாலும் எவ்வளவு தூரம் கல்லூரிகளிலே ஸ்தாபனங்களை அதிகப்படுத்த முடியுமோ அதுபற்றி பல்கலைக் கழகத்தோடு தொடர்ந்து பேசி அது எவ்வளவு தூரம் சாத்தியப்படுமோ அதைச் செய்ய அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது என்று கூறி வேறு விவரங்களை பின்னாலே தெரிவிக்கிறோம் என்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

MR. CHAIRMAN : Discussion on the resolution will be continued on the next non-official day.

The House will now adjourn and meet again at 3 p.m. tomorrow. 6–20 p.m.

The House then adjourned.

### V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

#### A. Statutory Rules and Orders.

* 190 *Notification issued with G.O. Ps. No. 1497, Revenue, dated 8th May 1965 making amendments to the Madras General Sales Tax Rules, 1959. [Laid on the Table of the House under section 53 (5) of the Madras General Sales Tax Act, 1959 (Madras Act I of 1959).]*

* 191. *Notification issued with G.O. Ms. No. 1018, Education, dated 14th June 1965 approving the list of all the parks and play-fields set out in the area within the jurisdiction of the Padmanabhapuram Municipal Council in Kanyakumari district. [Laid on the Table of the House under section 14 (3) of the Madras Parks, Play-fields and Open Spaces (Preservation and Regulation) Act, 1959 (Madras Act XXVI of 1959).]*

* 192 *Notification issued with G.O. Ms. No. 918, Education, dated 1st June 1965 approving the list of all the parks and play-fields set out in the area within the jurisdiction of the Tiruppattur Municipal Council in North Arcot district. [Laid on the Table of the House under section 14 (3) of the Madras Parks, Play-fields and Open Spaces (Preservation and Regulation) Act, 1959 (Madras Act XXVI of 1959).]*

#### B. Reports, notifications and other papers.

* 35. *Answer to Legislative Assembly question relating to the particulars of total fish catches for a period of one year during 1963–64 and the steps taken to increase the production of fish in this State.*

* 36. *Reports of the Estimates Committee of the Madras Legislative Assembly on Khadi and Village Industries and Industrial Estates.*

---

* Laid on the Table of the House on 9th August 1965.